ளும் பஞ்சாக்ஷரத்தியானஞ்செய்து எப்போதுந் தரிப்பது நன்மை யாகும்—எ-று. (௨௰)

புண்ணியநியமத்திலிறைபூசைநியமத்தி
னண்ணுதவமாதிகளினண்ணினவைநன்று
மெண்ணரியபாதகருமீனவுயிரியாவுங்
கண்மணியணிந்தவர்கள்கண்பெறுவரன்றே.

இ-ள். ஒருபுண்ணியத்தைச் செய்கின்ற காலத்திலும் சிவபூசை நியமங்களைச் செய்கின்ற காலத்திலும், பொருந்திய தவங்களைச் செய்கின்றகாலத்திலும், அந்த ருத்திராட்ச மணிகளைத் தரித்தால் நன்மை யாகும் அல்லாமலும் அளவிறந்த பாதகங்களைச் செய்தவர்களும் இழிவையுடைய எல்லாவுயிர்களும் ருத்திராக்ஷமணியைத் தரித்தால் ஞானக்கண்ணைப் பெறுவார்கள்—எ-று. (௰௩)

மூழ்கினுமலங்கள்சலம்விட்டிடினுமுலைக்கண்
மாழ்கினுமருந்தினும்வருந்தினுமுறக்கஞ்
சூழினுமசௌசகந்தொடக்கினுமிறைக்கட்
டாழ்வடமணிந்திடுவர்சத்தியதவத்தோர்.

இ-ள். உண்மையான தவத்தையுடைய பெரியோர்கள் ஸ்நானஞ் செய்யும்போதும் மலவிசர்க்கஞ் சலவிசர்க்கஞ் செய்யும்போதும் ஸ்திரீகளுடைய முலையினிடத்து மயங்கி மடங்கும்போதும் புசிக்கும்போதும், வருந்தும்போதும், உறங்கும்போதும். ஒரு சூதகங்கள் தொடர்ந்தபோதும், உருத்திராட்சத் தாழ்வடத்தைத் தரித்திருப்பார்கள்—எ-று. (௰௪)

சகத்திரமணித்திரள்கள்சாற்றணிவார்கண்
மகத்துவமுரைப்பரிதுவன்சிரசுகாது
தொகுத்தகளமார்பிருகைதோளிருமணிக்கட்
டகத்தணியினக்கவடமுக்கணுருவாகும்.

இ-ள். இறந்தபோதுமுன் இலட்சியமாகிய ஆயிரமணிகளைத் தரிப்பவர்களுடைய மகிமையை யளவிட்டுச் சொல்வதரிதாகும் அல்லாமலும் உருத்திராட்சமாலைகளை வளமைபொருந்திய சிரசிலும் காதுகளிலும் - சொல்லுகின்ற கண்டத்திலும் மார்பிலும் இரண்டுகைகளிலும் தோள்களிலும் இரண்டுமணிக்கட்டினிடத்திலும் தரித்தால் அவன் மூன்று கண்களையுடைய சிவஸ்வரூபமாவான்—எ-று. (௰௫)

அக்கவடமஞ்சுபதமோதியணிவாரோன்
முக்கணுடையானவரைமோதிவருமன்றிப்
புக்கவிடமுத்திதரிசித்தவர்கள்புத்தேள்
குக்கலணியிற்பிறவிகுன்றுமருளொன்றும்.

இ-ள். ஒருவனுடையசெவியினிடத்திற் றெளிவாகக்கேட்கும்படி சிவசிவாவென்று திரிகரணசுத்தியுடனேசொன்னால் அவனது பாதகங்களெல்லாம் இடிவிழுந்தபனைபோல எரிந்துபோம் அவனது இறப்பும் பிறப்பும் நீங்கிப்போம், ஒருவன் தன்னுடையவாயாரச் சிவாவென்று மூன்றுதரஞ் சொன்னாலம்மூன்றில் அந்த ஒருசொல்லுக்கு அவனைப்பரமசிவன் தமதுலகமாகிய சிவலோகபதத்தில் வைப்பார், மற்ற விரண்டுசொல்லும் பரமசிவன்மேற் கடன்களாகவிருக்கும். ()

பூசைகடருமமற்றவனேனு [illegible]பாரிரியைப்புகழ்ந்திடினவன்பாற்
[illegible]சினிசெய்யாள்கலைகுடிகொள்ளுங்கதிகளும்பலித் [illegible]டுமுயிர்ப்பி
ேஞைசையாலரன்பேரூைாத்திடின்மலைமேலுயரிடிபோல்வினையிடியு
மாசையான்முத்திப்பெண்கொளப்போவார்க்கவ்வுாைவாக்கியமாகும்

இ-ள். பூசைகளுந் தருமங்களுஞ் செய்யாதவனாகிலும்பரமசிவனைத்துதிசெய்தால் அவனிடத்தில் பூதேவியுஞ் சிதேவியுஞ் சரஸ்வதியுங் குடியாகவிருப்பார்க ளிவர்களுக்குக் கதிகளுமுண்டாகும் சுவாசவோசையால் சிவனது திருநாமத்தை உச்சரிப்பார்களாகில்அவர்களுடைய தீவினைகள் இடிவிழுந்தமலைபோல் இடிந்துபோகும், அல்லாமலும் மோக்ஷானந்தப்பெண்ணை அன்பாகக்கொள்ளப் போகின்றவர்களுக்கு அந்தச்சொல்லே சுபவாக்கியமாகும்—எ-று. (ரு)

இயன்றமாத்திரமஞ்செழுத்தை புமோதியிடதுபீசந்தனைத்தொட்டு
முபன்றிருகொம்பினடுவினிற்பரனைமுதற்பிரதோடமேகாணிற்
பயன்றருந்தருமந்தவமெலாமடையுமபதத்நனிற்பதம்பட நடந்து
வியனுறுதானமஞ்சலிசெயினும்விரவினோர்வலம்பலகோடி.

இ-ள். முதன்மையாகிய பிரதோஷகாலத்தில் தம்மாலியன்றமாத்திரம்-பஞ்சாக்ஷரசெபஞ்செய்து நந்திஸ்வநருடைய இடதுபீஜத்தைப் பரிசித்துக்கொண்டு இரண்டுகொம்புக்கு மத்தியாகப் பரமசிவனைத் தரிசனஞ்செய்தால் சகலதர்ம்மங்களையும் தவங்களையுஞ்செய்த பலனுண்டாகும், அல்லாமலும் பாதந்திற்பாதம்படும்படியாகமெல்லநடந்து சிவத்தியானத்தோடு அஞ்சலியஸ்தராய் ஒருதரம் பிரதக்ஷணஞ்செய்தால் பலகோடி பிரதக்ஷணஞ்செய்தபலனுண்டாகும்—எ-று. ()

முதல்வலமொன்றுக்கவ பிருத்தேகுமூன்றினிற்கோரநோய்திரு
மதிகமாமைந்திற்புத்திராதிகளாமந்தணர்கொலையழுநூறிற்
சுதமொருபத்தேலிந்திரனவன்றனியிடம்வலம்வரிற்பிறவிக்
கதமறும்வலமுமிடமுமாய்நடக்கிற்கருதினேன்றெவ்வொருகோடி.

இ-ள். ஒருதரம்பிரதட்சணஞ்செய்தால் அவமிருத்துவுநீங்கும், மூன்றுதரம்பிரதக்ஷணஞ்செய்தால் கொடுமையாகிய வியாதிகணீங்கும்

அதிகமாகிய ஐந்துபிரதட்சணஞ்செய்தால் சந்தானமுதலானசம்பத்துகளுண்டாகும், நூறுதரம்பிரதட்சணஞ்செய்தால் பிரம்மஹத்திமாபாதகநீங்கும், ஆயிரம்பிரதட்சணஞ்செய்தால் தேவேந்திரனுவான், ஒப்பற்ற நந்தீஸ்வரரைப் பிரதட்சணஞ்செய்தால் பிறவித்துன்பநீங்கும், வலமும் இடமுமாகப் பிரதட்சணஞ்செய்தால் ஒருபிரதட்சணத்திற்கு ஒருகோடிபிரதட்சணஞ்செய்த பலனுண்டாகும் — எ-று ()

உண்மதில்வலமொன்றெவ்வொருகோடிபுறமொன்றுகோடிபத்தாகு
மண்படவணங்கிவணங்கியேநடக்கின்மற்றதிற்கோடிபத்தாகு
முண்மையங்கப்பிரதக்கணமொன்றேயனந்தநூறுயிரங்கோடி
பண்ணினனவரேறூர்முடனேயெனினும்பரபதமவனதுகாணி.

இ-ள். கர்ப்பக்கிரகத்தைச்சூழ்ந்த உண்மதிலை ஒருதரம்பிரதட்சணஞ்செய்தால் அக்கர்ப்பக்கிரகத்தைக் கோடிபிரதட்சணஞ் செய்ததாகும், மூன்றும்பிரகாரமாகிய புறமதிலை ஒருதரம்பிரதட்சணஞ்செய்தால் அக்கர்ப்பக்கிரகத்தைப் பதுதுகோடி பிரதட்சணஞ் செய்ததாகும், சரீரத்தில் மண்படவிழுந்து வணங்கிவணங்கித் தண்டப்பிரதட்சணஞ்செய்தால் அதனிலும் பதுதுக்கோடிபங் கதிகமான பலனுண்டாகும், ஒருதரம்உண்மையாகியசிந்தையோடு அங்கப்பிரதட்சணஞ்செய்தால் அதனிலும் அளவில்லாத நூறுயிரங்கோடி பங்கதிகமான பலனுண்டாகும், அங்ஙனஞ்செய்பவன் ஒப்பற்றமூடனுனாலும்சிவபுரம் அவனது காணியாகும் — எ-று. (அ)

மருவுசந்நியாசியிடம்வரப்பிரமசாரிதான்வலம்வரமற்றை, யிருவரும்வலமுமிடமுமாய்நடக்கி லிலக்கமுமீனைந்துகோடி, கருவொருகோடியிரண்டுகோடியதாங் கருக்கொலைபாதகரோனு, மொருவலம்வருவாரிரவியையொப்பா ருணர்விறோர்வலஞ்செயலொழியார்.

இ-ள். பொருந்தியசந்நியாசிகள் இடமாகவும் பிரமசாரிகள் வலமாகவும், வானப்பிரஸ்தன்-கிரகஸ்தன்-இவர்களிருவரும்வலமுமிடமுமாகவும் பிரதட்சணம் செய்வார்களாகில் அவ்வொன்றே பத்துக்கோடிபிரதட்சணம் செய்ததாகும், அல்லாமலும் எண்ணப்பட்டஒருகோடியிரண்டுகோடியாகும் கருவைக்கொலைசெய்தபாதகரானுலும் இந்தவிதிப்படி ஒருதரம்பிரதட்சணஞ்செய்தால் அவர்கள் சூரியனுக்கொப்பாகப் பிரகாசிப்பார்கள்-ஆதலால் அறிஞர்கள் பிரதட்சணஞ்செய்வதை எப்போதும்விடார்கள் — எ-று. (௯)

அக்கொடுதிருநீறணிந்தெழுத்தைந்துமறைந்தரன் பூசையும்இயற்றிச், செக்கர்மேனியனைவலஞ்செய்துவணங்கிச்சிதம்பரமுதுகிரியொன்றிற், பக்கமாயடியார்பூசையுஞ்செய்து பணிவிடையியன்றவாறியற்றித், தக்கவாறிதய மரணநாட்கொள்வர் தமையலாற்சிவனையாமறியோம்.

இ-ள். உருத்திராக்ஷகண்டிகையும் விபூதியுந்தரித்துப் பஞ்சாக்ஷர ஜெபஞ்செய்து சிவபூசைசெய்து அந்திவண்ணனாகிய பரமசிவனைப் பிரதட்சணஞ்செய்துவணங்கிச் சிதம்பரத்திலாகிலும் விருத்தாசலத் திலாகிலும் அன்பாக அடியார்கள் பூசையுஞ்செய்துதம்மாலியன்றமா த்திரம் திருப்பணிசெய்து தேகாந்தத்திலும் தகுதியாக இருதயத்திற் சிவத்தியானஞ்செய்கின்ற புண்ணியவான்களையல்லாமல் வேறொருசி வனை யாம் அறியோம்—எ-று. (௰)

சிவகீர்த்திச்சருக்க-முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் - ௰௫-க்கு-திருவிருத்தம்-௬௭௨.

# கோபர்வதச்சருக்கம்.

வேறு.

சிற்பரமன்முதுகுன்றன்றிருக்கதையைக்கேட்டவிவள்
கிற்பளோகிற்கலளோவெனச்சிந்தைகெழுமாதே
முற்படநீரருள்செய்தீர்முதுகுன்றிற்கோவரையி
னற்கதையைநவிலுமெனவனவர்த்திநயந்துரைத்தாள்.

இ-ள். அனவர்த்தியம்மையார் நாதசன்மாவை வணங்கி ஓய்சுவாமீ நீர் யான்கேட்குமுன்னமே சின்மயவடிவரான பழமலைநாதருடைய அழகிய சரித்திரத்தைக்கேட்குந் தகுதியுடையவளோ அல்லவோவெ ன்று சற்றாகிலுந் திருவுளத்திற்குறியாமல் அனுக்கிரகஞ்செய்தீர் அ துபோலப் பழமலையின் -கண்ணுள்ள கோபர்வதத்தினுடைய நன்மை பொருந்திய சரித்திரத்தையும் அனுக்கிரகஞ்செய்யுமென்று அன்பாக விண்ணப்பஞ்செய்தாள்—எ-று. (௧)

வரைக்கரசாங்காவரையைவாயளக்குந்தகைமைத்தா
வுரைக்கின்றேமெனநாதருரைக்கின்றார்கயிலையினு
நரைத்தவிடைமேற்கொண்டுநற்கணங்கள்புடைசூழ
விரைக்கமழுமுதுகுன்றின்விரைந்தணைந்தான்விமலேசன்.

இ-ள். அங்ஙனம் விண்ணப்பஞ்செய்தபொழுது நாதசன்மாவா னவர் கிருபைகூர்ந்து ஓய் அனவர்த்தியையே நீகேட்பாயாக மலைக் கரசாகிய கோபர்வதத்தின் பெருமையானது நமது வாயினால் அள விட்டுச்சொல்லுந் தகுதியுடையதோ ஆயினும் யாமறிந்தமாத்திரஞ்

சொல்கின்றோமென்று திருவாய்மலர்ந்தருளுகின்றார் பூர்வத்தில் பரமசிவனவர் கயிலாச பர்வதத்திலிருந்து வெண்மைபொருந்திய ரிஷபவாகன ரூடராய் நல்ல சிவகணங்கள் புடைசூழ்ந்து வரவாசனை வீசுகின்ற மலர்ச்சோலைகள் நிறைந்துள்ள விருத்தகிரிக்கு விரைவாக எழுந்தருளிவந்தார்—எ-று. (உ)

தாருவனமுனிவர்செயுந்தவத்தினையுமவர்மாத
ரோருடையபதிவிரதவியல்பினையுஞ்சோதிப்பான்
காருருவத்திருமாலைக்கன்னிகையாய்ச்செல்கின்றோம்
நீரிருநியெனவுமையைநிறுத்தினான்வடகீழ்பால்.

இ-ள். அப்படியெழுந்தருளின பரமசிவனவர் உமையவளைப் பார்த்துத் தாருகாவன ரிஷிகள் செய்யப்பட்ட தபோ வலிமையையும் அவர்களதுபத்தினிமார்களுடைய பதிவிரதாதன்மையையும் சோதிக்கும்படி திருவுளங்கொண்டு மேகவண்ணனாகிய மகாவிஷ்ணு மோகினிரூபமாகவர நாம் போகின்றோம் ஆதலால் நீ யிவடத்திற்றனே யிருப்பாயாகவென்றுசொல்லி உமையவளை விருத்தகிரிக்கு வடகீழ்த் திசையிலுள்ள ஓர்நந்தவனத்தினிடத்து நிறுத்தியருளினார்—எ-று. (ங)

தனியிருப்பதெங்ஙனெனநேர்ந்தையலார்மெய்வருடிப்
புனிதனகைசெய்தருளிப்புகழ்நந்திதனைநிறுத்தி
யனிதமிலாசிவனகன்றனவ்வளவிலந்தவனத்
தினியதொருசிவலிங்கமுமையம்மையெதிர்கண்டாள்.

இ-ள். அதுகேட்டுத்தனிமையாக இவிடத்திலிருப்பதுஎப்படியென்று விண்ணப்பஞ்செய்தருளிய வுமையவளைப்பார்த்துப்பரமசிவன் நகைத்துச் சரீரத்தைத்தடவிக் கொடுத்து யாவராலும் புகழப்பெற்ற நந்தீஸ்வரரையும் உமையவளுடன் இருக்கும்படி நிறுத்தி எத்தநாளிலு அழிவில்லாமல் நித்தியநதுவமாக விளங்குகின்ற பரமசிவன்சென்றருளினார் அங்ஙனஞ் சென்றவளவில் உமையவளும் அந்நவனத்தின்கண் ஒருசிவலிங்கத்தை எதிரேகண்டருளினார்—எ-று. (ச)

உத்தமமாமீசானகங்கையுமங்கெதிர்கண்டாள்
புத்திதரும்புகழ்நந்தியேவல்செயப்பூசித்தா
ளத்தலமுநந்தியெனுமபெயராலேகோபருப்பதமாய்ச்
சத்தியெயரார்சத்திச்சுரமுமாய்த்தழைத்தனவாம்.

இ-ள். அதுகண்டவுடன் அவிடத்தில் உத்தமமாகிய அந்த ஈசானதிக்கில் ஒருதீர்த்தத்தையுங் கண்டருளினள் அதுகளைக்கண்டு மனக்களிப்பாக உமையவளும் தம்மைத் துதித்தவர்களுக்கு அறிவைத்தருகின்ற புகழையுடைய நந்தீஸ்வரர் பணிசெய்ய அந்தச்சிவலிங்கத்தைப்பூசித்தாள் ஆதலால் அந்தஸ்தலம் நந்தீஸ்வரருடையபெயரால்கோ

பர்வதமென்றும், சத்தியினுடைய பெயரால் சத்தீஸ்வரமென்றும் இரண்டு திருநாமங்கள் தழைக்கப்பெற்றனவாம்—எ-று. (ரு)

அவ்வளவிற்றருவனமகன் றருணர்கோடிகுழாஞ்
செவ்வொளிபோற்சத்தீசன் றிருவுருவிற்சிவன்றோன்ற
நவ்விவிழியாள்பணிந்துபூசித்தாணலஞ்சிறக்க
மெய்வரங்கேளெனப்பரமன் விளம்பினனுமைகேட்பாள்.

இ-ள். அங்ஙனம் பூசித்தபொழுது பரமசிவனானவர் தாருகாவனத்தைவிட்டு நீங்கிக் கோடி சூரியர்களுடைய சிவந்த பிரகாசம்போல் சத்தீஸ்வரமென்னும் சிவலிங்கத்தினிடமாகப் பிரகாசித்துத் தரிசனங் கொடுத்தருளினார், அதுகண்டு மான்போன்ற கண்களையுடைய உமையவளும் வணங்கிப் பூசைசெய்தாள், அதற்குப் பரமசிவன் மகிழ்வு கொண்டு உமையவளைப்பார்த்து உனக்கு நன்மையுண்டாகும்படியாக உண்மையான வரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்தருளின வளவில் உமையவள் விண்ணப்பஞ் செய்கின்றாள்—எ-று. (சு)

யானுகந்துபூசிக்குமினியகோபருப்பதத்திற்
றானதருமஞ்செய்வார்சகலதிருப்பெறவேண்டு
ஞானகங்கைமூழ்கினவர்ஞானமேபெறவேண்டும்
பானுமனைப்பதம்பணிவார்பதம்பெறவேண்டுமென்றாள்.

இ-ள். நான் சந்தோஷகரமாய்ப் பூசிக்கின்ற இனிமையான இந்த கோபர்வதத்தினிடத்தில் வந்து தானதர்மங்களைச் செய்கின்றவர்களெல்லாம் சர்வ ஐஸ்வரியங்களையுமடையவேண்டும் ஞானசொரூபமாகிய இந்த ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்தவர்களெல்லாரும் ஆத்மஞானத்தை யடையவேண்டும் அல்லாமலும் சூரியனைப்போற் பிரகாசிக்கின்ற உமது திருவடித்தாமரைகளை வணங்குகின்றவர்களெல்லாம் உமது சாயுச்சியபதத்தை யடையவேண்டும் என்கின்றவரங்களை விரும்பினேனென்று உமையவள் விண்ணப்பஞ் செய்தருளினார்—எ-று. (எ)

சிவனுங்கேட்டுமையவட்குச்சிறந்தவரங்கொடுத்தருளிப்
புவனமெலாநந்திவனைப்புகழ்பொலியப்புரிந்தருளிப்
பவனுமவன்றேவியுமாய்ப்பணிந்தவர்க்குப்பலிக்கின்று
ரிவணெனினுமாய்ப்பிழையாதவிவர்களோகதிபெறுவார்.

இ-ள். அதுகேட்டுப் பரமசிவனும் உமையவள் கருத்தின்படி சிறப்பாகி வரங்களை யனுக்கிரகஞ்செய்து அல்லாமலும் கோபர்வதத்தின் கீர்த்தியானது சகலபுவனங்களிலும் பிரகாசிக்கும்படிசெய்து அந்தஸ்தலத்திலும் தாம் சத்தீஸ்வரனும் உமையவள் சத்தியுமாக எழுந்தருளியிருந்து தம்மைவணங்கினவர்களுக்கெல்லாஞ் சகலநன்மையையுங்கொடுத்து ரக்ஷிக்கின்றார்கள் ஆதலால் இப்படிப்பட்ட ஸ்தலத்தில்

எளிதாகப்போயசகதியைப்பெறுதவர்களோ அரியதவங்களைச்செய்து கதியடையப்போகிறார்கள்—எ-று. (அ)

ஈசானகங்கையினீராடியிறைதாள்பணிந்து
பேசாதேநூற்றெட்டுப் பிதக்கணஞ்செய்தார்ச்சனைசெய்
தாசாறுற்பன்னிருநூறாயிரநல்லஞ்செழுத்தைத்
தேசாகசெபித்தவர்கள் சிவனுணைபதமபெறுவார்.

இ-ள். கோபர்வதத்தில் ஈசானகங்கையில்ஸ்நானஞ்செய்து பரமசிவனது திருவடிகளைவணங்கி மௌனமாக நூற்றெட்டுப் பிரதட்சணஞ்செய்து அர்ச்சனைசெய்து பரமாசாரியபாரம்பற்ற பஞ்சாட்சரத்தை அழகாகப் பன்னிரண்டுலட்சம் ஜெபஞ்செய்தால் அவர்கள் சிவாக்கினைப்படிக்குச் சிவபதவியைப்பெறுவார்கள்—எ-று. (கூ)

தணவாதேப்சுவலாயிற் றங்கிவரம்பெற்றுருந்
தணநாதரானவருங்கதியின்றுமளவில்லு
புணர்வாயதவர்கருணாபூரணருமங்கிருப்ப
ருணர்வாகசேவைசெய்வார்க்குற்றவரமுந்தருவார்.

இ-ள். கோபர்வதத்தைவிட்டு நீங்காமல் வசித்திருந்து வரங்களைப் பெற்றவர்களும் அந்தஸ்தலத்தில் சணநாதரானவர்களும் மோட்சத்தைப்பெற்றவர்களும் இவ்வளவென்று அளவுசொல்லமுடியாது அல்லாமலும் அந்தஸ்தலத்தில் சிவசம்பந்தமான மகா தவங்களைச்செய்து முடித்த கருணாபரிபூரணரொன்றும் ஒருமகாத்மாவு மிருக்கின்றார் அவரைத்தெரிந்து அறிவுதானுகச சேவை செய்தவர்களுக்கு அவர்கள் விரும்பிய சகலவரங்களையும் அவர்கொடுத்தருளுவார்—எ-று. (ய)

தேட்டமுறப்பூசித்துச்செபித்துண்டிதனைவிட்டுக்
காட்டசமாதியிலிருக்குங் கணநாதபூரணரை
நாட்டமுறப்பார்த்திருந்தானொருபாவிநயந்தவனை
யாட்கொள்ளும்படியிவன்றானோரோவென்றாராய்ந்தார்.

இ-ள். பரமசிவனை அன்போடுபூசைசெய்து ஜெபஞ்செய்து உணவையொழிந்து தம்பத்தைப்போல அசைவின்றிச் சமாதியிலிருக்கின்ற கணநாதராகிய கருணாபரிபூரணரொன்று மகாத்மாவை ஒருபாவியானவன் கண்கள் பொருந்தப் பார்த்திருந்தான் அந்தப்பாவியையும் கருணாபரிபூரணரானவர் தடுத்தாட்கொள்ள நினைத்துஇவன்யாவனென்று திருவுளத்தில் ஆலோசித்தருளினார்—எ-று. (யக)

வெண்வதையுங்கோவதையும் பிறவதையும்பெரும்பவமும்
பண்ணினவனெனநினைந்துபரலோகமில்லையந்தோ
தண்ணியவனெனத்தூரச்சன்னிதியினிற்பித்தார்
நண்ணியசந்நிதியினெடுநாளாகநின்றளவில்

இ-ள். ஸ்திரீவதைதையயும்-கோவதையையும் - இன்ன மனேகவதைகளையும்-கோடிபாதகங்களையுஞ் செய்தவனென்று தெரிந்து ஐயோ இவனுக்கு மோட்சமில்லையே இவன் மெத்த எளியவனென்று நினைந்து அவனைத்தமதுசந்நிதானத்தில் தூரமாகநிற்கும்படி செய்தருளினார் அங்ஙனே அந்தப்பாவியானவன் கருணாபரிபூரணரதுஞானப்பிரகாசம்பொருந்திய சந்நிதானத்தில் அனேகநாளாகநின்றகாலத்தில்-எ-று.

பாம்பின்றோலுரிந்ததுபோற்பனவன்றன்பாதங்கள்
போம்பரிசுற்றுக்கருணாபூரணனையும்பணிந்து
தாம்புனலுளீசானநதனின்மூழ்கியோகியையும்
வாம்புனற்செஞ்சடையனையுங்கூடவேவலஞ்செய்தான்.

இ-ள். அந்தப்பாவியாகிய பிராமணனானவன் தன்னுடையபாதகங்களெல்லாம் பாம்பினதுதோலுரிந்ததுபோல் நீங்கிப்போயினமையால் கருணாபரிபூரணரையும் வணங்கி அலைகளையோதுகின்ற நீர்நிறைந்த ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்து அந்தக கருணாபரிபூரணரையும் தாவுகின்றகங்கையைத்தரித்த சிவந்த ஜடாபாரத்தையுடைய சந்நிதிஸ்வரரையும் கூடப் பிரதட்சணஞ்செய்தான்—எ-று. (மரு)

கருவகற்றுமீசானகங்கையிற்றினமூழ்குகித்
திருவருளார்பாகனுடனிபோகியை புந்தினம்பணிந்து
சருகுதிரணந்தண்ணீர்தனையருந்தித்தவவடிவாய்
மருளகன்றபின்யோகிமறையவனைவரவழைத்தான்.

இ-ள். மேலும் அந்தப்பிராமணன் பிறவியைக் கெடுக்கின்ற ஈசானகங்கையினில் நாள்தோறும் ஸ்நானஞ்செய்து அருளுருவமாகிய உமையவளொழுந்தருளியிருக்கின்ற இடதுபாகத்தையுடைய சந்நிதீசுவரரையும் கருணாபரிபூரணரையும் நாள்தோறும் வணங்கிச் சருகுகள் திரணங்கள் தண்ணீர்முதலியவைகளைப் புசித்துத தவவடிவாயிருந்து சகலபிராந்தியும் ஒழிந்தபின்பு அந்தப்பிராமணனைக்கருணாபரிபூரணரானவர் சமீபத்தில் வரவழைத்தார் —எ-று. (மசா)

எந்தநாடுன்பெயரென் னிந்தவனத்தேதன்வந்தாய்
முந்தவுரையென்றுரைப்பமொழிகின்றனெடுந்தூரஞ்
சுந்தரநாடென்பெயருந்துருவிருத் நன்மறையவனன்
வந்ததுவுமிவ்விடத்தில்வழிபடுதிக்கேவென்றுரைத்தான்.

இ-ள். அங்ஙனம்வரவழைத்து அந்தப் பிராமணனைப் பார்த்து நீ யெந்தத்தேசம் உன்பெயரென்ன நீ இந்தவனத்திற்கு எதைக்குறித்துவந்தாய் இதுகளை விவரமாக நீமுன்னே சொல்வாயென்று கருணாபரிபூரணர் திருவாய்மலர்ந்தருள அந்தப் பிராமணன் சொல்லுகின்றான் ஓய் சுவாமீ அடியேனிருப்பது வெகுதூரமாகிய சுந்தரதேசம

ன்பெயருந் துருவிருத்தனென்று சொல்லுவார்கள் நான் பிராமண குலத்திற்பிறந்தவன் நான் இந்தவனத்திற்குவந்தநும் வழிபறித்துப் பறிப்பதற்கேயென்று விண்ணப்பஞ்செய்து பின்னுஞ் சொல்லுகின்றான்—எ-று. (௰௫)

பாவியானழியாத பலமரபுதானு மிலை
பாவியான்றிருடாத பலகளவுதானுமிலை
பாவியான்கொல்லாத பல்லுயிர்கடானுமிலை
பாவியான்பண்ணாத பாதகங்கடானுமிலை.

இ-ள். இந்தவுலகத்திலிருக்கின்ற முறைமையாகியபலமரபுகளிலும் பாவியாகிய நானழித்துவிடாத மரபுகளுமில்லை, பலகளவுகளிலும் நான் களவுசெய்யாத களவுகளுமில்லை, பலவுயிர்களிலும் நான்கொலைசெய்யாத வுயிர்களுமில்லை, பலபாதகங்களிலும் நான்செய்யாத பாதகங்களுமில்லை—எ-று. (௰௬)

கரவினையுமென்னுடைய கடுங்கொலையுங்கடுஞ்சினமும்
விரகினையுங்கண்டஞ்சி விறலினருநடுநடுங்கி
மரநடுங்குமண்ணடுக்கு மாதரகளுநடுநடுங்கு
நரர்நடுங்குஞ்சுரர்நடுங்கு நமனடுங்குமெனச்சொன்னான்.

இ-ள். அடியேன்செய்கின்ற வஞ்சகத்தையும் கொடியகொலைத்தொழிலையும் கடுமையாகிய கோபத்தையும் உபாயத்தையும் பார்த்துப்பயந்து மகாபராக்கிரமசாலிகளானவர்களும் நடுங்குவார்கள், அல்லாமலும் என்னைக்கண்டால் மரங்களுநடுங்கும், மண்ணும் நடுங்கும், மாதர்களும் நடுங்குவார்கள், மனிதர்களும் நடுங்குவார்கள், தேவர்களும் நடுங்குவார்கள், யமதர்ம்மராஜனும் நடுங்குவானென்று சொல்லிப் பின்னையும் விண்ணப்பஞ்செய்கின்றான்—எ-று. (௰௭)

குருடனுக்குக்கண்பெறுவான் குணதீர்த்தங்கிடைத்ததுபோன்
மருளனுக்குவெளிப்பட்டீர் மனந்தெளிந்தேனின்னமுநா
னிருளனுகாவழிதன்னை யிதுவென்றுகாட்டியக்காற்
றெருள்பெறுவேனெனயோகி திருப்பாதந்தனில்வீழ்ந்தான்,

இ-ள். பிறவிக்குருடனுக்குக் கண்கிடைக்கும்படியாக ஒரு புண்ணியதீர்த்தங்கிடைத்ததுபோலப் பாவியாகிய அடியேன்முன் தேவரீர் வெளிப்பட்டுத் தோன்றினீர் அதனாலடியேனுஞ் சித்தசுத்தியைப் பெற்றேனாதலால் இனிமேலும் அடியேன் அஞ்ஞானவழியிற் செல்லாத உண்மை ஞானவழியை இதுவென்று உபதேசஞ்செய்தருளினால் ஆத்மஞானத்தைப்பெற்றுக் கிருதார்த்தனாவேனென்று சொல்லிக் கருணை பரிபூரணருடைய திருவடித்தாமரைகளில்விழுந்து நமஸ்காரஞ்செய்தான்—எ-று. (௰௮)

என்றுநீயித்தலத்தி லெய்தினையுன்பாவ
மன்றகன்றதெம்முடைய வருண்ஞானப்பார்வையினாற்
சென்றுகங்கைமூழ்குதலாற் சிவன்சத்திநோக்கா
னன்றிகிடைத்திருக்கின்றாய் நமையகலாயெனவுரைத்து.

இ-ள் அங்ஙனம் வணங்கிநின்ற பிராமணனுக்கு இரங்கிக் கருணை பரிபூரணரானவர் சொல்லுகின்றார் ஓய் பிராமணனே நீ இந்தக்கோபர்வதமென்னுந் திவ்வியஸ்தலத்திற்கு எப்பொழுதுவந்தாயோ அப்பொழுதே உன்னுடைய பாதகங்களெல்லாம் நீங்கிவிட்டது, அல்லாமலும் எமது கிருபா ஞானதிருஷ்டியினாலும் தினந்தோறும் போய் ஈசானகங்கையில் முழுகினபடியினாலும் சத்தீஸ்வரர் சிற்சத்தி யிவர்களது திருவருட்பார்வையினாலும் நீ சகலநன்மையும் பெற்றிருக்கின்றாய் ஆதலால் நீ எப்போதும் நம்மைவிட்டு நீங்காம லிருப்பாயென்றுசொல்லி—எ-று. (௰௯)

தஞ்சநியமங்களையுந் தவத்தினையுமுண்மையுட
னஞ்செழுத்துமுபதேச மருளினனவ்வழியில்
விஞ்சுதவமிகமுதிகி மெய்ஞ்ஞானியாயிறைவன்
கஞ்சமலர்ச்சேவடிக்கே கலந்தொன்றியுடனானான்,

இ-ள். பற்றுக்கோடாகிய சகலநேமானுஷ்டானங்களையுந் தவத்தையும் உண்மையாகிய பிரணவத்தோடு பஞ்சாக்ஷரத்தையுமுபதேசஞ்செய்தருளினார் அந்தப்பிராமணனும் அவர் அனுக்கிரகத்தருளிய உபதேசவழியாக மேன்மையானதவத்தில் மிகவுமுதிகிநின்றமெய்ஞ்ஞானத்தையுடையவனாகிச் சத்தீஸ்வரருடைய திருவடித்தாமரைகளில்இரண்டறக்கலந்துஒன்றாகிய அத்துவிதானந்தநிலையைப்பெற்றான்

நந்திகோபருப்பதத்தி னரர்சுரர்களியாரேனும்
வந்தவர்கண்மூன்றுநாண் மகிழ்ந்துநியமத்துடனே
சுந்தலறத்துறந்திருக்கிற் கண்ணுதலோன்பதமடைவர்
பந்தமுடனிருந்தவரும் பரமன்றன்வடிவாவர்.

இ-ள். நந்தீஸ்வரருடையபெயரால் விளங்குகின்ற கோபர்வதத்தினிடமாகவந்தவர்கள் மனிதர்களானாலும் - தேவர்களானாலும் - மற்றெவர்களானாலும் - அந்தஸ்தலத்தில் மூன்றுநாள்வரைக்கும் நியமமாகக் கெடுதலில்லாமல் சகலவாசனையையும் ஒழித்து மனமகிழ்ச்சியாக வசித்திருந்தால் அவர்கள் சத்தீஸ்வரருடைய திருவடியைப் பெறுவார்கள் அல்லாமலும் அந்தஸ்தலத்தில் குடும்பத்தோடு வசித்திருந்தவர்களும் சிவசொரூபமாகிய சாரூபபதவியை அடைவார்கள். (௨௧)

கோபர்வதச்சருக்க-முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் - ௰௭ - க்கு - திருவிருத்தம்-௩௧௩.

பதினேழாவது

# பிருடிச்சருக்கம்.

வேறு.

நாதர்மாறுமுனோதுவாரொரு நாலுவேதப்பிருடிதன்
மாதர்மாதருமுருசியென்பவண்மகதமெனும்பெருநாட்டுளோர்
பேதபூமிபிரதக்கணத்தினிற்பிரணவப்பதிவந்தனர்
மீதுவாரகையேகிவித்துரும[illegible]துமேவினர்கங்கையே.

இ-ள். நாதசன்மாவானவர் அனவர்த்தியென்னுந் தேவியாரைப்பார்த்துச்சொல்லுகின்றார் ஒய் அனவர்த்தியையே நீ கேட்பாயாக பூர்வத்தில் ஒப்பற்ற நான்குவேதங்களுந்தெரிந்த பிருடிதனென்னும் பெயரையுடைய ஒரு பிராமணன் அவனது ஆசையாகிய மனையவளும் முருசியென்னும்பெயரையுடையவள் அவர்கள் மகதமென்கின்ற பெரிய தேசத்திலிருந்தவர்கள் அவர்களிருவரும் நானாபேதங்களையுடைய பூப்பிரதக்ஷணஞ்செய்யும்படி நினைந்துவருகையில் முன்னே பிரணவஸ்தலத்திற்குவந்து பின்புமேலான துவாரகாபுரிக்குச்சென்றுவித்துருமமென்னுந்தலத்திற்குப்போய் கங்கையை அடைந்தார்கள்.(க)

கனகலம்பிரியாவகந்திரிவிக்கிரமஞ்சமுக்குன்றகம்
வினவுசாய்வனம்வெள்வனம்வதரீவனஞ்சதுமறைவன
நனிவருங்கடவூர்குடந்தைநன்னாகவீச்சுரமாதவை
யினியராமனதீசாங்குமரித்துறைதனிலெய்தினார்.

இ-ள். எப்போதும் சகலசம்பத்து நீங்காத திருவிக்கிரமம் திருக்கழுக்குன்றம்-சொல்லுகின்ற திருச்சாயாவனம்-திருவெண்காடு-திருவதரியாச்சிரமம்- திருமறைக்காடு - நன்மைபொருந்திய திருக்கடவூர்-திருக்குடந்தை-திருநாகீஸ்வரம்-திருமாதவை-இனிமையான ராமேஸ்வரம்-முதலான ஸ்தலவாசஞ்செய்து கன்னியா குமரித்துறையில் வந்தார்கள்—எ-று. (உ)

சுவணவக்கிரம்பகவநற்புரிதுதிதருங்கணபதியிட
மௌனிகோகரணஞ்சயித்தவமற்றுநற்பதியுற்றபின்
றுவனாவந்தனரவனையுங்கொருசுந்தரச்சிவயோகிதான்
றவனமாயினிரொங்கணேகினிர்சாற்றுமென்றனர்சாற்றுவார்.

இ-ள். பின்பு சுவணவக்கிரம் - நன்மைபொருந்திய பகவபுரியாவருந் துதிக்கப்பட்ட விநாயகபுரி-மௌனிகோகரணம்-சயித்தவமுத

வீய வனேய இவ்வியஸ்தலங்களிலும்போய்த் தரிசித்தபின்பு துவாரகா புரிக்குவந்தார்கள் அவிடத்திலும் வசிக்கின்ற அழகிய ஒருசிவயோகி யார் அவர்களைக்கண்டு நீங்கள் இவ்வளவுசரீரப்பிரயாசமுண்டாகும்ப டி எவ்விடத்திற்குப்போனீர்கள் அதைச்சொல்லுமென்றுகேட்க, அ வர்கள் சொல்லுகின்றார்கள்—எ-று. (௯)

பிருடிதன்னுடைதருவன்மாதவபிருதிவிப்பிரதக்கண
முருசியாளொடுபரமனுலயமுற்றுய் வந்தன முன்பதத்
தெரிசனத்தையுமுற்றனம்மெனவந்தயோகிசிரித்துநீர்
பெருமைபெற்றதலங்களுற்றிலிர்பெரிதுகாலடைவந்திரால்.

இ-ள். பிருடிதனுனவன் சொல்லுகின்றான் ஓய்மகாயோகீஸ்வரரே அடியேனும் முருசியென்னுமென்மனைவியும் சிவாலயமுழுவதும் பூப்பிரதட்சணஞ்செய்துவந்தோம் அல்லாமலும் உம்முடைய பாத தரிசனமும் பெற்றோமென்றுசொன்னவளவில் அந்த யோகீஸ்வரர் நகைசெய்து நீங்கள் விருதாவிற் கால்கள்வருந்தும்படி வெகுதூரம் வழிநடந்து பிரயாசமடைந்தீர்களேயல்லாமல் பெருமை மிகுந்தவொரு ஸ்தலங்களுக்காகிலும் போகவில்லையேயென்றுசொல்லி—எ-று. (௪)

சென்றவன்றுவிமானமுற்றிடுதெய்விகத்தலமுண்டோா
வென்றுரைத்தனரிருவருந்தொழுதேதுதானெனவோதுவா
ரன்றுகண்டகிபிமையச்சுதைதாவில்கிட்டினவேணியே
மன்றகர்ணிகைசரயுநர்மதைமாகளங்கரிகாளமே.

இ-ள். சென்றபொழுதே தெய்வவிமானம் வருகின்ற தெய்வீகஸ் தலங்கள் அனேகம் இருக்கின்றதேயென்று சொல்லியருளினார் அது கேட்டு அந்த இரண்டுபேரும் வணங்கிநின்று அந்தஸ்தலங்கள் எது எது அதுகளை எமக்குத்தெரியசசொல்லவேண்டுமென்றுகேட்க அந்த யோகீஸ்வரர் அப்போதுசொல்லுகின்றார், கண்டகி- யமையச்சுதை- குற்றமற்றகிருஷ்ணவேணி மேன்மைநிறைந்த மணிகர்ணிகை - சரயு நர்மதை-மாகாளம்-கரிகாளம்—எ-று. (ரு)

பாவநாசம்விசாலைசந்திரபாகையற்புதையிரவியூர்
தேவரார்க்கிருதஞ்சிராப்பளிசிந்துகோமதிகிரணியே
காவிரிக்கனகற்குளம்பிரவாளமேயுறைகைத்தல
மாவனஞ்சிகிவனாயணுக்கமலாலயந்திருவம்பலம்.

இ-ள. பாவநாசம்-விசாலை-சந்திரபாகை-அற்புதை-இரவியூர் - தே வர்களமுதம்பொசித்த திருச்சிராப்பள்ளி சிந்துகோமதி கிரணிகா விரி-அழகியகற்குளம் பிரவாளம் திருவுறைகைப்பதி- திருவானைக்கா- திருமயிலாடுதுறை-திருவண்ணமலை -திருவாரூர்சிதம்பரம்—எ-று

துருத்திசந்திரரேகைதொன்மழபாடிசுந்தரமாமலை
திருத்துநெய்த்தலமங்கலந்திருவாஞ்சியந்திருமருதரோ
டருந்தவெண்கணமயூரமாவடுதண்டுறைக்கமழ்கோடிகா
விருந்தவெற்பொடுகோபருப்பதமிக்கதென்றுவிளம்பினர்.

இ-ள். திருத்துருத்தி-சந்திரரேகை - பழமையாகிய திருமழபாடி-சுந்தரகிரி-திருத்தமாகிய திருநெய்த்தானம்-திருமங்கலம் - திருவாஞ்சியம்-திருவிடைமருதூர் - பரமசிவனெழுந்தருளிய திருவெண்காடும் திருமாயூரம்-குளிர்ச்சிபொருந்திய திருவாவடுதுறை - திருக்கோடிகா-விருத்தாசலம் கோபருப்பதம் - இவைகளெல்லாம் முக்கிய ஸ்தலமென்று சொல்லியருளி—எ-று. (எ)

அத்தலங்களிலேகிடாவிடினரிதுநற்கதியென்றனை
னெய்த்தனம்வழிநடையினாலினியேகுதற்கரிதுன்னருட்
சித்திதந்தருளென்றனர்சிவயோகியுள்ளமகிழ்ந்துநீ
ரித்தகைத்திருநீற்றைநெற்றியிலிட்டமாத்திரைதன்னிலே.

இ-ள். அப்படிப்பட்ட ஸ்தலங்களிற்செல்லாவிட்டால் மோக்ஷங்கிடைப்பது அரிதென்று சிவயோகி சொல்லியருளினார் அதுகேட்டு நாங்களிருவரும் வழிநடந்த பிரயாசத்தினால்மிகுந்த இளைப்புற்றிருக்கின்றோம் எங்களால் நடக்கமுடியாது ஆதலால் உமது திருவருட்பார்வைகொடுத்து ரக்ஷிக்கவேண்டுமென்றுசொன்னார்கள் அதுகேட்டு சிவயோகியாரும் மனமகிழ்ந்து நீங்கள் இந்தவெண்மைபொருந்திய திருநீற்றை நெற்றியில்தரித்துக்கொண்டமாத்திரத்தில்—எ-று. (அ)

நல்லவாகியகோபருப்பதநண்ணுவீரொருமூன்றுநா
ளல்லல்சிந்திடவரனையர்ச்சியுமகிலசித்தியுமணையுமென்
றெல்லைநீற்றையளித்தனன்னதுண்மையென்றவர்வாங்கினை
ரெல்லைநெற்றியிலிட்டனர்பசுவரையிலெய்தினரிருவரும்

இ-ள். நன்மைபொருந்திய கோபர்வதத்தை யடைந்து அவிடத்தில் உங்களுடைய பிறவித்துன்ப நீங்கும்படி மூன்றுநாள்பரியந்தம் பரமசிவனைப் பூசைசெய்யுங்கள் அங்ஙனம் செய்தால் சகலசித்திகளு முண்டாகுமென்றுசொல்லி விபூதிப்பிரசாதங்கொடுத்தருளினார் அதை அவர்களிருவரும் உண்மையென்று இரண்டுகைகளாலும் வாங்கி நெற்றியி லணிந்துகொண்டு கோபர்வதத்திற்குச்சென்றார்கள்—எ-று. (க)

கங்கைமூழ்கினர்மங்கைநாயகர்கழல்பணிந்தனர்மூன்றுநா
ளங்கணித்திரையுண்டிவிட்டனரஞ்செழுத்தையுமோதினு
ரெங்களையருமெங்களம்மையுமிடபவாகனராகியே
தங்குகாட்சிகொடுத்தனரவர்தாமகிழ்ந்துபணிந்தனர்.

இ-ள். அவிடத்திற்சென்று ஈசானகங்கையில் ஸ்நானம்பண்ணிச் சத்தீஸ்வரருடைய திருவடிகளைவணங்கி மூன்றுநாள்பரியந்தம் உண்டியுமுறக்கமு மில்லாமலிருந்து பஞ்சாட்சரஜெபஞ்செய்தார்கள் அப்பொழுது எமது பிதாவாகிய சத்தீஸ்வரரும் மாதாவாகிய சிற்சத்தியும் ரிஷபவாகனரூடரா யெழுந்தருளிப் பிரத்தியட்சமாகத்தரிசனங் கொடுத்தருளினார் அதைக்கண்டு அவர்களிருவரு மனங்களித்து நமஸ்கரித்துநின்றார்கள்—எ-று. (௰)

வரங்கள்கேளுமினென்றனன்சிவன்மங்கையும்மறையவனுமாய்
கரங்கள்கூப்பிவணங்கிபேபவக்கடல்கடாதிடுமாறெமக் [க்
கிரங்கிநின்சரணங்கடந்தருளென்றனரஃதீர்தளர்
தரங்கியாதுநம்யோகிசொற்படிதலமூலாவுகவென்றனர்.

இ-ள். அங்ஙன நிற்பவர்களைப்பார்த்துப் பரமசிவன் உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்களென்று திருவாய்மலர்ந் தருளினார் அதுகேட்டு முருசியம்மையும் பிருடிகனும்கைகளை யஞ்சலியாகக்கூப்பிவணங்கிசுவாமி தேவரீர் அடியேங்களுக்காகஇரக்கமுற்றுப்பிறவிச்சமுத்திரத்தை நீந்தும்படி உமது திருவடிகளைத் தெப்பமாகக்கொடுத்து ரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள் பரமசிவனும் அங்ஙனே அந்தவரத்தைக்கொடுத்தருளி நீங்கள்மனஞ்சலியாமல் நமது யோகியாருடைய வாக்கியப்படி ஸ்தலவாசஞ் செய்யுங்களென்றுசொல்லி—எ-று. (௰௧)

உமாபதிச்சிவனருளினுலொளியால்விளங்குகளங்கமில்
விமானநல்கினர்பிருடிகன்சிவன்மேனியாயினனுமைதனைச
சமானமாயினண்முருசியுர்தடையின்றியெங்குமுலாவியே
தமாதிடத்தினர்கோபருப்பார்தக்கசேவடிபுக்கினார்.

இ-ள். உமாபதியாகியபரமசிவனானவர் நமதுகிருபையினால்திவ்வியப்பிரகாசம்பொருந்திய களங்கரகிதமான ஒரு தெய்வவிமானத்தையுங்கொடுத்தருளினார் அவ்விமானத்துடன் பிருடிகன் சிவசாரூபம்பெற்றனன் முருசியம்மையார் உமையவளாகிய சத்திசாரூபம்பெற்றனள் இப்படிச் சாரூபம்பெற்ற இருவரும் ஒருதடையுமில்லாமல் எந்தஸ்தலங்களிலும் வாசஞ்செய்து பின்பு தமது சிற்சத்தியாகிய உமையவளை இடப்பாகத்திலுடைய சத்தீஸ்வரரது அழகிய திருவடிகளிற் சேர்ந்தார்கள்—எ-று. (௰௨)

பிருடிச்சருக்க முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் ௰௭-க்கு-திருவிருத்தம் ௬௫.

பதினெட்டாவது

# சசிவன்னச்சருக்கம்.

வேறு.

நாரணர்தம்மைநோக்கிநம்பர்தாமருளிச்செய்வார்
சீரணிதவத்தினோர்கள்சேவையின்பெருமைகேளா
யேரணிபாவவெச்சனென்றொருமறையோன்மைந்தன்
றாரணிதன்னிற்பாவிசசிவன்னனென்பான்மன்னோ.

இ-ள். மகாவிஷ்ணுவைப் பார்த்துப் பரமசிவன் றிருவுளம்பற்றியருளுகின்றார், ஓய் மகாவிஷ்ணுவே சிறப்புப்பொருந்திய தவத்தையுடைய பெரியோர்கள் தரிசனத்தின் பெருமையைக் கேட்பாயாக, அஃதியாதெனில் அழகு பொருந்த பாவவெச்சனென்றுசொல்லுகின்ற ஒருபிராமணனுடைய குமாரன் உலகத்திற்கொடிதான பாவங்களைச்செய்தவன் சசிவன்னனென்னும் பெயரையுடையவன்—எ-று. (க)

பத்தரையும்மையெம்மைப்பாவுவேதத்தைநீற்றை
மெய்த்தருமத்தைநிந்தைவிளம்புவதவன்றன்னல்வி
த்தலுங்கோறல்செய்தனியமர்தானடுத்தார்தம்மைக்
குத்திரஞ்செய்தறுனேகுலாசாரமாவதம்மா.

இ-ள். அடியார்களையும் உம்மையும் எம்மையும் யாவருந் துதிக்கப்பட்ட வேதத்தையும் திருநீற்றையும் உண்மையாகிய அறத்தையும் நிந்தைசொல்வதே அவனுக் குக்கல்வியாகும்தினந்தோறும் உயிர்க்கொலைசெய்வதே அவனுக்குநியமமாகும் அடுத்தவர்களைவஞ்சித்துக்கெடுப்பதே அவனுக்குக் குலாசாரமாகும்—எ-று. (உ)

மாதரைக்கிளைஞர்தம்மை வாலரைக்கருவைக்கோவை
வேதியர்தம்மைக்கொல்லும் விரதமேவிரதநல்ல
நீதிகளுடையோர்வீட்டி னெருப்பிட்டும்விடங்களிட்டும்
பாதகப்பொடிகதூவிப் பறிப்பதேயவன்றன்கேள்வி.

இ-ள். ஸ்திரீகளையும்-சுற்றத்தாரையும் - வாலிபரையும்-கர்ப்பத்தையும்-பசுக்களையும்-பிராமணர்களையும்-கொல்லுகின்ற விரதமே யவனுக்கு விரதமாகும், நல்லநீதியையுடையவர்களுடைய வீட்டில்நெருப்புவைத்தும் அவர்களுக்குவிஷமருந்துகளையூட்டியும் சொக்குப்பொடிகளைத்தூவியும் அவர்களிடத்துள்ள பொருள்களைப்பறித்துக் கொள்வதே அவனுக்குக் கேள்வியாகும்—எ-று. (ங)

பத்திரமெழுதியேவற் பணியினர்போலச்சென்று
சூத்திரஞ்செய்துகோளுங் குறளையுமுரைத்துமுன்னே

பொழுதேகாண்பிக்கும் அஃதெங்ஙனமெனில் நெருப்புமிகுந்தால் நீரடங்குவதுபோலும் நீர்மிகுந்தால் நெருப்படங்குவதுபோலும்.()

சசிவன்னன் றந்தையாருந் தரையிடைப்பணிந்துபோற்றி
யிசையுளதெய்வபத்த ரொன்றுமாதவரை நோக்கி
விசையுளமைந்தன்செய்த வினையெலாம்விளங்கச்சொன்னார்
கசிவுடைதெய்வபத்தர் கருணையாலுபதேசிப்பார்.

இ-ள். சசிவன்னன்படுகின்ற துன்பத்தை அவன்பிதாவாகிய பாவவெச்சர்கண்டு மனஞ்சகிக்காதவராகிக் கீர்த்தியுள்ளதெய்வபத்தரென்னும் ஒரு பெரியவரைப்பார்த்துப் பூமியில்விழுந்து வணங்கித்துதித்து நின்று குமாரனான தனது புதல்வன்செய்த சகலதீவினைகளையும் நன்றாகத்தெரியும்படி விண்ணப்பஞ்செய்தார் அதுகேட்டு அன்பையுடைய அந்தத்தெய்வபத்தரும் கிருபையினா லனுக்கிரகஞ்செய்கின்றார்—எ-று. (௮)

அழுங்கியபாவவெச்சவருந்தழு துகுன்றன்முத்தி
வழங்குவான்வைத்தநந்திவனாடநாற்காதவெல்லைச்
செழுந்திருமலையாள்பூசைசெய்தசத்தீசுரத்திற்
கொழுந்துபட்டயனார்பூசைகொண்டபின்சிருட்டிபெற்றார்.

இ-ள். வருத்தங்கொண்ட பாவவெச்சனென்னும் பிராமணனே-நீ கேட்பாயாக-லிங்கவடிவமாகிய பழமலைநாதர் சகலவுயிர்களுக்கும் மோட்சத்தைக் கொடுக்கும்பொருட்டு வைத்திருக்கின்ற கோபர்வதமும் நாற்காதவழியி லிருக்கின்றது செழுமைபொருந்திய அழகியபர்வதராஜபுத்திரியாகிய உமையவள்பூசித்த அந்தச்சத்தீஸ்வரத்தில் முன்பு-பிர்ம்மதேவரும் அன்புகொண்டு சிவபூசைசெய்தபின்பு சிருஷ்டித்தொழிலைப்பெற்றார்—எ-று. (௯)

பூருவமகவான்பூசைபுரிந்துவானரசனானா
னேருறுமிந்திராணிபூசையாலவனைச்சேர்ந்தா
டாருகாசுரன்பூசித்துத்தானவர்க்கரசனானா
னாருறுவெள்ளிபூசித்தவர்புரோகிதருமானார்.

இ-ள். பூர்வத்தில் தேவேந்திரன் அந்தஸ்தலத்தில்வந்து பூசைசெய்து சுவர்க்கலோகத்திற்கு - அதிபதியானான் அழகுபொருந்திய இந்திராணியானவள் பூசைசெய்து அந்த தேவேந்திரனைப் புருஷனாகப்பெற்றாள்-தாருகாசுரன் பூசைசெய்து ராட்சதர்களுக்கு அதிபதியானான் - ராட்சதர்களுக்கு உரிமைசெய்கின்ற சுக்கிராசாரியார் பூசைசெய்து அந்த ராட்சதர்களுக்குக் குருவாகினார்—எ-று. (௰)

உருவசிபூசையாலேயுயர்மகவானைச்சேர்ந்தா
ணிருமலதந்திவெற்பினீயுதின்மகனும்போகிற்

தருமதானங்கள்செய்துசத்திநாதனையும்போற்றிப்
பருவரைதனின்மாநந்திபாராயணரிருப்பர்கேண்மோ.

இ-ள். உருவசியானவள் பூசைசெய்து உயர்ந்த தேவேந்திரனைக் கூடினுன் ஆதலால் அந்தப் பரிசுத்தமாகிய கோபர்வதத்திற்கு நீயும் உன்குமாரனும்போய் தர்மதானங்களைச்செய்து சத்தீஸ்வரரையும்வ ணங்கித்துதித்து பின்பு அந்தப்பருத்த கோபர்வதத்தில் மாநந்திபாரா யணரொன்றும் பெரியவிருக்கின்றார் அதையுங்கேட்பாயாக—எ-று.

அந்தமாயோகிதன்னையாறுதசேவைபண்ணின்
மைந்தனேயகலுமென்றார்மறைமுனிவாக்கைநம்பி
யிந்தமால்வரையினண்ணிபீசானகங்கையாடித்
தந்தையுமகனுஞ்சத்திதலைவனைப்பணிந்துபோற்றி.

இ-ள். அந்தமகாத்மாவாகிய யோகீஸ்வரரையும் நீங்காதிருந்துதரி சனஞ்செய்தால் உன்குமாரனுடைய பிணிகளெல்லாம் நீங்கிவிடுமெ ன்று அனுக்கிரகஞ்செய்தார் அதுகேட்டு அந்தத்தெய்வபத்தருடைய திருவாக்கை உபதேசமாகநம்பி பாவவெச்சரும் அவர் குமாரனுகிய சசிவன்னனும் இப்படிப்பட்ட பெருமையையுடைய கோபர்வதத்தி ந்துப்போய் ஈசானகங்கையில் ஸ்நானஞ்செய்து சத்தீஸ்வரரை வண ங்கித்துதித்து—எ-று. (௰உ)

பாமதேசிகர்மாநந்திபராயணர்தம்மைப்போற்றி
யுரமுறப்பணிந்துசேவையுற்றபின்மைந்தன்செய்த
கரவுடைப்பவங்கள்சொன்னுன்கடைக்கணுற்யோகிநோக்க
விரவுபாதகங்களெல்லாமேவிடாதகன்றதன்றே.

இ-ள். பரமாசாரியராகிய மாநந்திபராயணரைத்துதித்துப் பூமியி ற்சரீரம்பொருந்த வணங்கித்தரிசனஞ்செய்தபின்பு பாவவெச்சனெ ன்னும்பிராமணர் தன்புத்திரன்செய்த வஞ்சகமுள்ள பாதகங்களை வி ண்ணப்பஞ்செய்தார் - அதுகேட்டு அந்தமாநந்தி பாராயணர் தமது கிருபாகடாட்சத்தினுல் பார்த்தமாத்திரத்தில் அவனிடத்திற் சேர்ந்து ள்ள சகலபாதகங்களும் மேலிடாமல் நீங்கிவிட்டன—எ-று. (௰௩)

யோகிதன்பூசைக்கேற்றவுபகரணங்கள்செய்தும்
போகமார்பசுக்கண்மேய்த்தும்பொற்பதம்பிடித்துநின்றுன்
வேகியபவங்கணீங்கி வியாதியும்வலியும்போய்
மேகியதுடனேபின்னர்ப்பரிகலச்சேடமீந்தார்.

இ-ள். அதன்பின்பு சசிவன்னனனவன் அந்தயோகீஸ்வரருடைய பூசைக்குத்தகுந்த உபகரணங்களைச்சேர்த்தும் செல்வத்தைத்தருகி ற பசுக்களைமேய்த்தும் அவரது அழகிய திருவடிகளைப்பிடித்துமி ருந்தான் அங்ஙனமிருக்குங்காலையில் அவன்செய்துள்ள கொடூரமா கிய பாவங்களெல்லாம் நீங்கி உடனே பலவியாதியும் பிரதானமான

முயலகவலியும், பசாசும்நீங்கினபிற்பாடு அவரதுபரிகலப் பிரசாதங் கொடுத்தருளினார்—எ-று. (௰௪)

பரிகலச்சேடங்கொண்டு பதத்தினிற்பூசைசெய்தா
னரியநீறியோகிசாத்தி யடியிணைதலைமேல்வைத்துத்
தெரிவுறவுபதேசித்தான் றிவ்வியஞானம்பெற்றுத்
தரிவுளமுத்திபெற்றான் றந்தையுமுத்திபெற்றான்.

இ-ள். சசிவன்னனானவன் பரிகலப் பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு அவரதுதிருவடியிற் பூசைசெய்தான் அங்ஙனம் பூசைசெய்தவளவில் அந்தயோகீஸ்வரர் அரிதாகிய திருநீற்றை அவனது நெற்றியிலணிந்து இரண்டுபாதங்களையும் அவன்சிரசின்மேற்சூட்டிப் பிரமோபதேசத்தைத் தெளிவுபொருந்த உபதேசித்தார் அதனாற்றிவ்வியஞானத்தைப்பெற்று சதாகாலமும் நித்தியத்துவமாயுள்ள மோட்சத்தைப்பெற்றான் அவனது பிதாவாகிய பாவவெச்சனென்னும் பிராமணரும் மோட்சத்தைப்பெற்றார்—எ-று. (௰௫)

பிதிர்க்களுநரகைவிட்டுப் பெருஞ்சிவலோகஞ்சேர்ந்தார்
கதிச்சசிவன்னர்காதற் புலைச்சியுங்கதியிற்சேர்ந்தாள்
மதித்திருமாலேகேளாய் மாதவர்பெருமைதன்னைத்
துதிக்கரிதின்னுஞ்சொல்வோஞ் சுவகையென்றொருத்திவேசி.

இ-ள். அவனுடைய பிதிர்க்களும் நரகத்தைவிட்டுப் பெரிதாகியசிவலோகத்திற் சேர்ந்தார்கள் அங்ஙன முத்தியைப்பெற்ற சசிவன்னருடைய ஆசைமனைவியாகிய பறைச்சியுங் கதியைப்பெற்றாள், ஆதலால் விவேகத்தையுடைய மகாவிஷ்ணுவே நீகேட்பாயாக பெரியோர்களுடைய பெருமையைச்சொல்வதற்கரிதாகும் ஆயினும் இன்னமுஞ் சொல்லுகின்றோம், அஃதியாதெனில் சுவகையென்றுபெயரையுடைய ஒருவேசை யிருந்தாள்—எ-று. (௰௬)

நகையினானகைக்கப்பண்ணு நடையினானடையைமாற்றுந்
தகையினாற்றகைவுசெய்யுந் தனத்தினாற்றனத்தைவாங்கு
மிகையினால்விழித்துநோக்கி விழித்திடப்பண்ணுமிந்த
வகையினான்மனிதரஞ்சும் வானவர்தாமுமஞ்சும்

இ-ள். அவள் நகைக்கின்ற நகைப்பினால் ஞானவலிமையை யுடையவர்களாயினும் அவர்களுள்ளத்திலுங் காமமுண்டாகி நகைக்கும்படிசெய்வாள், அவளது நடையினால் அவர்கள் ஞானநடையையுந் தடுமாறச்செய்வள், அவளது அழகினால் அவர்களைப்புறத்திற் செல்லவொட்டாமலுந் தஸ்மரணத்திற் றிரும்பவொட்டாமலுந் தடுத்துவிடுவள், அவளது ஸ்தனங்களால் அவர்கள்கல்விப்பொருளையுஞ்செல்வப்பொருளையும் பறித்துக்கொள்வள், அல்லாமலும் வஞ்சகத்திறை

ந்தகண்களால் விழித்துப்பார்த்து எவர்களையும் பிரமிக்கச்செய்வள், இப்படிப்பட்ட தன்மையினால் அவளைக்கண்டால் மனிதர்களும்பய ப்படுவார்கள் தேவர்களும் பயப்படுவார்கள்—எ-று. (௰௭)

வழுவிலரப்பொருண்மிக்குள்ளார் மணந்தவர்தணந்தஞான்று
மழும்விழுமாசைகூறி யருக்கிடுநல்லோர்க்காணிற்
றொழுதுளேயிருத்துந்துஞ்சிற் சோரமுஞ்செய்யுமன்றித்
தழுவியும்பொருளையாங்குந தவறினாற்கோறல்செய்யும்.

இ-ள். குற்றமில்லாத அதிகதிரவியத்தையுடையவர்களோடு கூடிப் பிரிந்தகாலத்திலும் அழுவள், அல்லாமலும் ஆசைப்பெருக்கங்கூறி அவர் கள்மேல்விழுவள், அசைவுமுற்றவள்போல் நிற்பள், நல்லவர்களைக்க ண்டால் கும்பிட்டவழிபட்டு மனையிலுள்ளிருக்கச் செய்வள், அவர்கள் நித்திரைசெய்தால் அவர்களிடத்திலுள்ள பொருள்களைக் களவுசெய்வ ள் அதுவுமல்லாமல் அவர்களைக்கூடிப் பொருளைப்பறிப்பள், அதற் குத் தவறிப்போனால் கொன்றுவிடுவள்—எ-று. (௰௮)

வேசிதானியனோர்கணிற் விருந்திட்டுமருந்தையிட்டும்
பாசமாய்த்தழுவிப்பொய்யே பழமையாட்டிச்சேர்ந்தும்
வாசமார்பொடிகள்தூவி மையல்செய்யுமாரோர்
லாசினுற்பிணியால்அழி யவபவபாசதோடுமே.

இ-ள். அந்தவேசையானவள் மாதவர்களோடால விருந்துசெய் தும் மருந்திட்டும் அவர்களையன்பாகத் தழுவிப் பொய்யாகப் பழ மைபாராட்டிக்கூடியும் அவர்களுக்கு வாசனைப்பொருளாகிய சொக்குப் பொடிகளைத்தூவியும், அவர்களைச் சொக்கியும், இப்படி வருகின்ற காலத்தில் அவள்செய்த பாசகங்களால் வியாதியால் பிடிக்கொண்டு அ வயவங்களை அழிந்துபோனார்—எ-று. (௰௯)

வருந்தபேர்விட்டஞான்று மாதவப்பெருவர்நண்ண
வருத்தியார்பலவீசுபாதம் விளக்கிநல்லருசமூட்டித்
திருத்தியசந்தனஞ்சாத்திச் சேடமுநீர்நறுங்காமனுங்
கருத்திறைவனோடணைத்து சந்திரபணிந்தன்றே.

இ-ள். அங்ஙனந்துன்பமெய்யெய்திட்டகாலத்தில் அந்தவேசையானவள் மகாதவத்தையுடைய ஒரு யோகீசுவரர் வருதலைக்கண் டு ஆசையால் வணங்கிநின்று அவருடைய திருவடிகளை யபிஷேகஞ்செ ய்து அவருக்கு நன்மையான திருவமுதூட்டித் திருத்தமாகிய சந் தனம்பூசிப் பின்பு பரிசனப்பிரசாதமும் பாதநீர்த்தமும் அன்பாக உ ட்கொண்டாள் அப்பொழுதே அவளைச்சூழ்ந்த கொடியவியாதிகளெ ல்லாம் நீங்கிவிட்டது—எ-று. (௨௰)

அவண்மனந்தெளிந்தாளென்னை யடிமைகொண்டருளுமென்று
ளியறுபதேசம்பண்ணி யிருபதந்தலைமேற்சூட்டப்

பவமறுத்தெம்மைச்சேர்ந்தாள் பாசமுஞ்சவர்க்கஞ்சேர்ந்தார்
கவுரியிற்பற்றத்தொண்டர் காதலினிருப்போமென்றார்.

இ-ள். அதன்பின்பு அந்த வேசையானவள் சித்தசுத்தியுள்ளவளாகி அந்தயோகீஸ்வரரை வணங்கி ஒப் சுவாமீ என்னை யடிமைகொண்டு ரக்ஷிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தாள் அதுகேட்டு அந்த யோகீஸ்வரரும் அங்ஙனே ஞானோபதேசஞ்செய்து இரண்டு திருவடிகளும் அவள் சிரசின்மேற் சூட்டினவளவில் பிறவிநீங்கி யென்னுடைய திருவடியிற் சேர்ந்தாள், அவளது சுற்றத்தாரும் சுவர்க்கத்திற்போயிருந்தார்கள், ஆகையினால் உமைபங்காளுடைய அன்பில் நாம் வைத்திருக்கும் விருப்பைப்பார்க்கிலும் பத்தர்களுடைய அன்பில் அதிகவிருப்பு வைத்திருப்போமென்று திருவுளம்பற்றியருளிப் பின்னுஞ் சொல்லுகின்றார்—எ-று. (௨௧)

மாயனேதொண்டர்க்கீந்த வளமெலாநமக்கேயாகு
மேயவரிடத்தேயாமு மிருப்பமாயிருப்பதென்று
ராயனும்பூசைபண்ணி யடியிணைதலைமேல்வைத்து
நேயமாமுண்மைகேட்டு நிருத்தமுமன்றிற்கண்டான்.

இ-ள். ஒப் மகாவிஷ்ணுவே நீகேட்பாயாக அடியார்களுக்குச்செய்தசகலநன்மைகளும் நமக்குச்செய்வதாகும் நாமும் அவர்களிடத்தில் றனவே யிருப்போம் விருப்பமாகப் பொருந்தியிருப்பதென்று அநுக்கிரகஞ் செய்தருளினார், அதுகேட்டு மகாவிஷ்ணுவும் பரமசிவனைப் பூசித்து இரண்டு திருவடிகளையும் சிரமேல் வைத்துக்கொண்டு அன்பாகிய மெய்ஞ்ஞான வுபதேசத்தைப் பெற்றுச் சிதம்பரத்தில் நடன தரிசனமுங்கண்டு தரிசித்தார்—எ-று. (௨௨)

கருக்குழிவேண்டிற்கொல்லுங் காலனை வேண்டிற்செக்கி
னெருக்குணவேண்டினந்த நேசனைநிந்தைசெய்மின்
றிருகிளர்செல்வம்வேண்டிற் றிகழ்முத்திவேண்டிற்றொண்டர்
வருக்கமேபோற்றுமென்று மனரந்தனன்மன்றுளாடி.

இ-ள். பிறவிக்குழியை வேண்டினால் கொல்லுகின்றயமனை வேண்டினால் செக்கினிடத்தில் நெருக்குண்ணவேண்டினால்-நமது அடியார்களை நிந்தைசெய்யுங்கள், லட்சுமிவிலாசம்பொருந்திய செல்வம்வேண்டினால் பிரகாசிக்கின்ற மோக்ஷம்வேண்டினால் அடியார்கள் கூட்டத்தை வணங்குங்களென் றனுக்கிரகஞ்செய்து சிதம்பரத்தில் நடனஞ்செய்தருளிய பரமசிவனவர் சிதாகாசத்தில் மறைந்தருளினார்—எ-று. (௨௩)

புராரிதான்மறைதல்கண்டு போதகவுரைப்பினாலே
முராரிமுன்னிற்றல்போல முதல்வனைப்பணிந்துபோற்றிக்

காரரிமாமலர்கள்கொண்டு கழலிணைபூசைசெய்து
நாரரிவைகுந்தஞ்சென்று நயந்தனனுண்மைநிட்டை.

இ-ள். திரிபுராந்தகராகிய பரமசிவன் மறைந்தருளினதைக் கண்டு உபதேசமகிமையினால் விஷ்ணுவானவர் பரமசிவன் முன்னே நிற்பது போலக் கொண்டு அவரை வணங்கித் துதித்துக் கைகளில் வண்டுகள் மொய்க்கின்ற புஷ்பங்களைக்கொண்டு இரண்டு திருவடிகளையும் பூசித்து நரசிம்ம மூர்த்தியாகிய மகாவிஷ்ணுவும் வைகுந்தத்திற்குப் போய் உண்மை நிஷ்டையிலிருந்தார்—எ-று. (௨௪)

முன்றிருமாலுக்கிந்தமுதுகுன்றிலுபதேசித்து
மன்றிலேயாடல்செய்யும்வழக்கினான்மன்றுங்குன்று
மொன்றெனவறிந்தோமன்றியுடர்மன்றிற்றிருக்கூத்தாடிக்
குன்றிலேயிருப்போமென்றகொள்கையுமிதனாற்கண்டோம்.

இ-ள். முற்காலத்தில் மகாவிஷ்ணுவுக்கு இந்த விருத்தாசலத்தில் உபதேசஞ்செய்து சிதம்பரத்தில் திருநடனதரிசனங்கொடுத்தருளிய சம்பந்தத்தினால் சிதம்பரமும் விருத்தாசலமும் ஒன்றென்று தெரிந்தோம், அல்லாமலும் உயர்ச்சிபொருந்திய சிதம்பரத்தில் திருநடனஞ்செய்து விருத்தாசலத்தில் வசித்திருப்போமென்று பரமசிவன் திருவாய்மலர்ந்தருளிய தன்மையையும் இதனால் அறிந்தோம்—எ-று. ()

இரதமாகுளிகைநன்றேலிரும்புபொன்னாதறிண்ணம்
வரமுளமிருதசஞ்சீவனமுண்டேன்மடிந்தாருய்வ
ரனருள்பெற்றுநாலாம்பாதமுமடைவர்நல்ல
குரவனேநேரின்மைந்தன்பெருமையைக்கூறற்பாற்றோ.

இ-ள். இரசகுளிகையானது நன்மையுள்ளதாயிருந்தால் இரும்பு பொன்னாவது சத்தியம், மேன்மையான மிருதசஞ்சீவனமென்னு மந்திரசித்தியுமருந்துமிருந்தால் இறந்தவர்கள் பிழைப்பார்கள் அது போல நலமிருக்க சற்குருவானவர் கிடைத்தால் எவர்களுஞ் சிவகடாட்சம்பெற்று நாலாம்பாதமாகிய சத்திநிபாதத்தையும் பெறுவார்கள் அங்ஙனமான சற்குருதரிசனஞ்செய்த சற்சீஷனது பெருமையை நம்மாலளவிட்டுச்சொல்ல முடியுமோ—எ-று. (௨௬)

வேறு.

அத்தன்விருத்தகிரிக் கதையைத்தொழுதர்ச்சனைசெய்தவர்பற்றி
லைந்தவர், சத்தமுரைத்தவரந்தமுரைத்தவர்சந்நிதிசொன்னவர்தஞ்
செவிபுகுமவ, ரொத்தனைமாதர்களொத்தனை வேதியரீன்றவரர்வினைமெய்க்
கொலைசெய்யினு, மெத்தியபொன்சிவனத்தமெடுக்கினும்வெண்சுரா
யுண்கினுமேவிலர்பாவம்.

இ-ள். பழமலைநாதருடைய விருத்தாசல புராணத்தை வணங்கிப் பூசித்தவர்கள், அதைவிடாமல் எழுதினவர்கள், ஏதை ஓசையாகப் படித்தவர்கள் அதற்குப் பொருள்சொன்னவர்கள், அதைச்சிவசன்னிதானத்திற்றுதித்தவர்கள், அங்ஙனந் துதிப்பதைத் தங்கள் செவியினிடமாகக் கேட்டவர்கள் இவர்களெல்லாரும் எவ்வளவு ஸ்திரீகள்-எவ்வளவுபிராமணர்கள் - தாய்தந்தைகள் - பசுக்கள்முதலிய எந்தக் கொலைபாதகங்களைச் செய்தாலும் பிரகாசிக்கின்ற பொன்னையும்சிவாலயப்பொருளையுங் களவுசெய்தாலும் மதுபானஞ்செய்தாலும் அதுகளால் ஒருபாதகங்களையும் பொருந்தார்கள்—எ-று. (உ௭)

ஒப்பியபாதகமத்தனையும் முரகத்துரிபோலவொருக்கியருக்கனை, யெய்ப்பிருளெப்படி யப்படியாகுவொத்தனைவேண்டின் ரத்தனையும்மவர், கைப்படுமுத்திகள் வித்தைகள்சித்திகள் கைப்படுமிக்கதை செப்புமிடத்தினி, லப்பருமம்மையு மத்தலமேவுவரந்தியகாலமும் வந்தெதிர்நிற்பார்.

இ-ள். பழைமையாகப் பொருந்திய சகலபாவங்களையும் பாம்பினுடைய தோலையுரித்ததுபோலவும், சூரியனுடைய சந்நிதானத்திற் பட்ட இருளெப்படிப்போமோ அதுபோலவும்கெடுத்து சூரியப்பிரகாசம்போலப் பிரகாசிப்பார்கள், அல்லாமலும் எதை விரும்பினாலும் அவைகளெல்லாம் அவர்களுக்குக் கைவசமாகும், மோட்சமும்-வித்தையும் சித்திகளும் கைவசமாகும், இந்தப் புராணத்தைப் படிக்கின்றஸ்தானத்தில் பரமசிவனும் சிற்சத்தியும் அதுவேஸ்தலமாக எழுந்தருளியிருப்பார்கள் அன்றியும் தேகாந்தத்திலும்வந்து தெரிசனமாவார்கள்—எ-று. (உ௮)

சத்துருநாசமடைந் தளகேசன் றனக்கிணையாவர்மலர்த்திருமேவுவள், வித்தகராகுவரிம்மையின் வெம்மைகள் வேந்தரிராசிகள் பாம்புபசாசுகள், பத்திரமாமிருகட்பயமற்றிருபத் தொருகோடியவர்க்குளகால்வழி, யத்தனையும்பதமெய்துவர் புத்தகமங்கைதரிப்பினுமப்படியாமால்.

இ-ள். சத்துருவாதையில்லாமல் செல்வத்திற் குபேரனுக்கொப்பாகவாழ்வார்கள் அவர்களிடத்தில் மலர்மகளாகிய லட்சுமி நிவாசமாய்ப் பிரியாதிருப்பள் ஞானசொரூபராவார்கள், இப்பிறப்பில் வெவ்விதான கொடுமைகளும் ராஜகூட்டபயமும் - சர்ப்பபயமும் - பசாசுபயமும், அஸ்திரபயமும்- மிருகபயமும் - இல்லாமல் மறுமையில் அவர்களும் அவர்கள் வமிசத்தில் இருபத்தொருகோடி கால்வழியிலு

ளா பிறவிகளும் மோட்சத்தைப்பொருந்துவார்கள், அல்லாமலும் இந்தப் புத்தகத்தைக் கைகளில்வைத்திருந்தாலும் அந்தப்பலனைப்பெறுவார்கள்—எ-று. (௨௯)

வேறு.

திக்கனைத்தும் மழைபெய்கசெழுர்புவி
பொங்கிவாழ்கபுரவலனோங்குக
நங்கள்சங்கரன்பூசை நலம்பெற
சங்கரனடியார்கடழைக்கவே.

இ-ள். மாதந்தோறும் மும்மாரி பொழியக்கடவது, செழுமைபொருந்திய உலகம் செல்வமிகுந்து வாழக்கடவது, இந்த வுலகத்தை யாளுகின்ற அரசன் வாழக்கடவன் நமது பரமசிவனுடையபூசையானது நலம்பெறக்கடவது பரமசிவனடியார்கள் எப்போதுந் தழைத்துவாழக்கடவார்கள்—எ-று. (௩௰)

சசிவண்ணச்சருக்க-முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் - ௰அ - க்கு - திருவிருத்தம் - சா௩௫.

விருத்தாசலபுராணம்-முற்றிற்று.

§

சிவமயம்.

அருளிறைவணக்கம்.

ஸ்ரீஞானபீடத்திறைகரபாத்திரியற்றத்தாத்திரோயர்செங்கமல
சுந்தரார்நாகைச்செழும்பதியருணசலசுகாம்புதியெழிற்பிறைசை
வந்தருணருணசலகுருவிவர்தமபதங்களென்மனத்துறும்பரிசாற்
சுந்தரமார்விருத்தாசலப்பெரும்புராணந்தனக்குரைசெயத்துணிந்தனன்
[ளுல்
ஞானமேயெபுரியு மெனையொருபொருளாத் திருவுளங்கொண்டெனைப்
[போல்வந்
தானமேபோற்கருதித்தன்னுருவாக்கியடிமலரொன்சிரந்தாக்கி
யேடிவோர்மொழிப்பாலூட்டியபிறைசை யெம்மருணசலசிவமென்
றிசைநின்றுபழமலைப்புராணந்தனக்குரைநவிற்றிடுமன்றே.

❦